*'Port and Dock Workers' strike.*

* 25-A (*Short Notice Question*).—SRI V. V. RAMASWAMI : Will the Hon. the Chief Minister be pleased to state whether it is a fact that during the Port and Dock Workers' strike the Government provided assistance in the form of labour to prevent a breakdown of work in the Madras Harbour?

THE HON. SRI R. VENKATARAMAN (on behalf of the Hon. the Chief Minister) : The Govenment regret that they have to decline to answer the question in the public interest.

*National Flag of India*

* 26 Q.—VIDWAN T. MUTHUKANNAPPAN : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether the Government have issued any rules for the display of the National Flag of India on important Government buildings on days of National importance, such as Independence Day and Republic Day; and

(*b*) if so, what they are?

THE HON. SRI R. VENKATARAMAN (on behalf of the Hon. the Chief Minister) : (*a*) No, Sir.

(*b*) The Government of India have not issued any special rules for the flying of National Flags on important Government buildings on days of National importance such as Independence Day, Republic Day, etc. The Government of India have permitted the unrestricted display of National Flags on private buildings on these special occasions in consonance with the National sentiment prevailing on such occasions and this permission will cover the cases of other Government buildings over which the National Flag is not flown daily.

VIDWAN T. MUTHUKANNAPPAN : தமிழ்நாட்டின் தலைநகரம் சென்னை. சென்னை நகரில் கோட்டை அரசாங்கத்தின் தலைமைக் காரியாலயம். கோட்டைக் கொடி மரத்தில் எப்ரல், மே, ஜூன் மாதங்களில் நான்கைந்து நாட்கள் கொடி பறக்கவில்லை என்கிற விஷயம் கனம் அமைச்சருக்குத் தெரியுமா ? அதைப்பற்றி என்ன நடவடிக்கை எடுக்கப் பட்டது ?

THE HON. SRI R. VENKATARAMAN : அந்தத் தகவல் எனக்குத் தெரியாது. எந்தத் தேதியில் பறக்கவில்லை என்று குறிப்பிட்டு எழுதினால், அதைப்பற்றி நான் விசாரிக்கிறேன்.

SRI MOHAMED RAZA KHAN : Formerly it was the practice for Ministers, the Speaker of the Assembly, and the Chairman of the Council to have the National Flag flying on their cars. If that practice has now been given up, may I know the reasons therefor?

THE HON. SRI R. VENKATARAMAN : It is not felt necessary to fly the National Flag on the cars of Ministers or other dignitaries. If my hon. Friend studies the practice in western countries, he will know that it is only the Heads of States that use National Flags.

17th September 1958]

VIDWAN T. MUTHUKANNAPPAN : தேசியக் கொடி மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. ஒரு பக்தனுக்குக் கடவுள் திருவுருவம் எப்படியோ அப்படித் தேசபக்தனுக்குக் கொடி. தேசியத் திரு நாட்களில் அரசாங்கக் காரியாலயங்கள் மீதும் தனியார் வீடுகள் மீதும் கொடி பறக்க விடப்படுகின்றன. கொடிகள் சாதாரணமாகக் காலையில் ஏற்றப்பட்டு மாலை சூரியன் மறையும் போது இறக்கப்படவேண்டும். ஆனால் பல ஆண்டுகளாக நான் பார்க்கிறேன், அத்தேசியத் திரு நாட்களில் ஏற்றப்படும் கொடிகள் இரவும் பகலுமாக பல நாட்கள் அப்படியே பறந்து கொண்டிருக்க விடப் படுகின்றன. இது கொடி பற்றிய முறைக்கு அகௌரவமாகும். இம்முறை இனியாவது சீர் செய்யப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : தேசிய நாட்களில் பறக்க விடலாம் என்று அனுமதித்திருக்கிறோம். இதர நாட்களில் பறக்கும்படியாக விடுவது சரியல்ல, பறக்கவிடுவதாகப் புகார் வந்தால் கவனித்துத் தக்க நடவடிக்கை எடுக்கப்படும். அம்மாதிரிச் செய்யவிடுவது தவறு என்பதாக எடுத்துச் சொல்லலாம்.

SRI MOHAMED RAZA KHAN : Sir, if I were to accept the reason given by the Government, am I to understand that it took them nearly eleven years to decide that it was not necessary to fly National Flags on the cars of Ministers and other dignitaries?

THE HON. SRI R. VENKATARAMAN : Better late than never.

SRI V. V. RAMASWAMI : அமைச்சர்கள் வெளியூர்களில் சுற்றுப் பிரயாணம் செய்யும்போது, அவர்கள் செல்கிற வண்டிகளில் தேசியக் கொடிகள் பறக்கின்றனவா ? 3-30 p.m.

THE HON. SRI R. VENKATARAMAN : சிலர் பறக்க விடுகிறார்கள், சிலர் பறக்க விடுவதில்லை. கொடி பறப்பது இவ்வளவு பெரிய பிரச்னையாக ஆகும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. (சிரிப்பு.)

SRI A. SUBRAMANYAM : இந்தக் கோட்டையில் சில சமயங்களில் கிழிந்த கொடி பறந்திருக்கிறது ; சில சமயங்களில் அந்தக் கொடியின் அகல நீளத்தில் உள்ள வர்ணப் பகுதிகள் அவை இருக்கவேண்டிய அளவை விடக் குறைந்த அளவிலும், நடுவிலுள்ள வெள்ளை நிறப் பகுதி அது இருக்க வேண்டிய அளவை விட அதிகமான அளவிலும் இருந்தது. இவ்வாறு தவறான முறையில் கோட்டையில் கொடி பறப்பது அரசாங்கத் திற்குத் தெரியுமா ? இங்கே கொடி அம்மாதிரிப் பறக்காமல் சரியானபடி பறக்கும்படி அரசாங்கம் பார்த்துக்கொள்ளுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : சட்டப்படி அம்மாதிரிப் பறக்கவிடக் கூடாது. அம்மாதிரி கொடி பறக்கிறது என்று யாராவது சொன்னதன் பேரில் அந்த விஷயம் சர்க்காருக்குத் தெரிந்தால்தான், சர்க்கார் நடவடிக்கை எடுக்க முடியும். ஒவ்வொரு இடத்திலும், மேற் பார்வை செய்து, யார் யார் தேசியக் கொடியைத் தவறாகப் பறக்க விடுகிறார்கள் என்று கவனித்து அவர்களை 'ப்ராஸிக்யூட்' பண்ணுவது என்ற நிலைமை வந்தால், வாழ்க்கையே கஷ்டமாகி விடும். ஆகவே, எல்லோரும் தேசியக் கொடியைச் சரியான முறையில் பறக்க விடுவார்கள் என்ற நம்பிக்கை கொண்டு, இதை அவரவர்களுடைய நல்லெண்ணத்திற்கு விட்டுவிட வேண்டும்.

SRI A. SUBRAMANYAM : கோட்டையிலுள்ள கொடி தவறான முறையில் சில சமயங்களில் பறந்தது என்று நான் சொன்னேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : கோட்டையில் அம்மாதிரிப் பறக்கவில்லை. கோட்டையில் நல்ல புதுக் கொடியைப் பறக்க விட்டிருக் கிறோம்.